ஸ்ரீ:

ஸ்ரீராமஜெயம்

அரியக்குடி

ஸ்ரீநிவாசப்பெருமாள் திருவிழா

# வாகனக்கவி.



இஃது

அமராவதிபுதூர்

ஸ்ரீமான் வயி. நாக. ராம. அ. இராமநாதன் செட்டியார்

அவர்களால்

இயற்றப்பெற்று



---

அரியக்குடி

ஸ்ரீமான் வயி. ராம. கிருஷ்ணன் செட்டியார்

அவர்களால்

பிரசுரிக்கப்பெற்றது.

ரக்தாக்ஷி௵

1924

கோபில் பிரஸ், திருவல்லிக்கேணி.

ஸ்ரீமத் மஹாமஹோபாத்தியாயர்

பண்டித

உ. வே. சாமிநாதையரவர்கள்

# சாத்துகவி

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

சீர்மலிந்த தென்னரியக் குடிவாழும் பெருமை
திகழ்புலவர் பலர்கூடிப் பாடியுத வென்னப்
பேர்மலிந்த வத்தலம்வாழ் பெருமானே ரிளமான்
பிறங்குமார் புடைச்சீனி வாசநெடு மாலின்
ஏர்மலிந்த திருநாள்வா கனக்கவிக ளமுதா
யினிக்கவளித் தனனமரா வதிபுத்தூ ருடையான்
தார்மலிந்த புயத்தண்ணா மலைப்பெரியோ னளித்த
தமிழ்க்குருசில் இராமநா தப்பெயர்மே தகையே.

ஸ்ரீ:

ஸ்ரீ ராமஜெயம்.

# முகவுரை



சீருஞ் சிறப்பும் வாய்ந்த புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் எந்நாட்டினும் சிறந்த தென்னாட்டில் இனிக்குஞ் செந்தமிழ்க் கியாண்டும் வரையாதுவேண்டிய கொடுக்கும் பாண்டி மண்டலத்தின் கீழ்த்திசையிலுள்ள தேனாற்றின் வடகரையில் வடதிருவேங்கடமுடைய ஸ்ரீநிவாசப் பெருமான் சதாசாந்நித்யமுள்ள தென்திருப் பதியாய் விளங்கும் அரியக்குடி என்னும் திவ்ய க்ஷேத் திரத்தில் ஸ்ரீமான் அழ. ராம. நா. ஸ்ரீனிவாசன் செட்டி யார் அவர்களுக்கு முறைப்படி சித்தித்த தேவஸ்தான அதிகார விசாரணைத் தொடக்கத்தில் வைகாசி விசாக பிரமோத்ஸவத்திற்கு நாளிது ரக்தாட்சி வருடம் சித் திரை மாதம் 28-ந் தேதியே துவஜாரோகணமாகிப். பூர்வாங்கம் நடைபெறுவதை உணர்ந்து, அப்பெருமான் தொன்று தொட்டு எங்கள் பண்டைக் குலதெய்வமாத லாலும் அந்நகரம் எனது வேட்டகமாகலானும் ஆங்குச் சென்று, முதற்றிருநாள் முதலே அக் கண்கொள்ளாக் காட்சியைத் தரிசித்துக் , களித்துக்கொண் டிருக்குங் காலத்தில், 12-ஆம் திருநாள் தெப்போற்சவத்துக்குத் திருக்குளத்தில் நீர் மிகவும் வற்றியிருக்க அந்நீரைக் கொண்டே ஒருவாறு காலை விழாக் கொண்டருளித் தெப்பத்தை விட்டிறங்கித் தீர்த்தமண்டபத்திற் கெழுந்

தருளித் தீர்த்தப் பிரசாதம் அனுக்கிரகிக்கும் சமயத்தில் "இவ்வருடம் மழையின்மையால் திருக்குளத்தில் தண்ணீரின்றித் தெப்பம் நன்கு சுற்றுவதற்கு இயலாதிருப்பது, வெகுஜனங்கள்கூடித் தரிசிக்கக்கூடிய உத்ஸவ விமரிசைக்கு முற்றும் குறைவாயிருப்பதால், இன்று மேகங்கள் மழைபொழிய உமது கருணை மழை பொழிந்தருளல் வேண்டும்'' என்று பக்த ஜனங்கள் குறையிரந்து வேண்டிநின்று தத்தம் இல்லங்கட்கு வழிக்கொண்டனர். அதை எம்பிரான் திருவுள்ளம் பற்றியதற்கு அறிகுறியாக மாலையிலேயே வானம் கறுத்துச் சிறிது மழையும் தூறிக்கொண்டிருந்தது.

அன்றிரவு 16 நாழிகைக்குமேல் ஆகாயத்தில் மேகங்கள் ஒருங்கு ஈண்டி வடதிசையில் ஒரு நாழிகை வழி தூரத்திலுள்ள பெருமரக் காட்டில் பெருமழை பொழிந்து இடையூர்க் கண்வாய் என்ற நீர்நிலை நிறைந்து மடைவழியாகத் திருக்குளத்தில் நான்கு நாழிகை நேரத்தில் தண்ணீர் நிரம்ப, ஆங்கு அமிழ்ந்து கிடந்த தெப்பம் பக்தஜனங்களின் உள்ளக்கிளர்ச்சியே போல் மேலுயர்ந்து, மிதந்து விளங்கிற்று. இவ்வைபவத்தைக்கண்ட அனைவரும் ஸ்ரீனிவாசப் பெருமானை மனமொழி மெய்களால் நினைந்து நினைந்து உருகியும் தோத்திரங்களாற் பாடியும் ஆனந்தத்தால் ஆடியும் சந்தோஷவெள்ளத்திற் றிளைத்தனர்.

அப்பால் நம்பெருமாள் மண்டபத்திலிருந்து தெப்பத்தில் வீற்றிருந்தருளித் திருகுளத்தில் மூன்று பிரதட்சணமும் மிக்க கோலாகலத்துடன் நிறைவேற்றுவித்துக்கொண்டருளினன். இதனை உடனிருந்து கண்டு களித்த யான் ஆராமை பற்றி "தண்ணிய பொழில் சூழ்'' என்ற பாவினை உடனேபாடி எம்பெருமானுக்

குப் புனைந்தேன். அதனைக்கேட்டுக் களித்து வியந்த நெடுவைச் சங்கீதசாகித்ய சாமர்த்தியத் தமிழ் வித்வான் ஸ்ரீமத்இராமசுவாமிஅய்யங்கார்அவர்களும்ஸ்ரீமத் வால்மீகி ராமாயணப் பிரசங்க வியாபகரான சமஸ்கிருத வித்வான் வரதய்யங்கார் அவர்களும், இவ்வாறே உத்ஸவ ஆரம்பமுதல் முற்றும் வரையில் ஒவ்வொரு நாள் விசேடத்தையும் உள்ளவாறு பாடவேண்டு மென்று பெரிதும் வற்புறுத்தினர். இதனை அனுசரித்து வேறு பலரும் மிக்க விருப்பத்தோடு கேட்டுக்கொண்டனர். அன்னோர்கள் வாய்மொழித் துணையிருப்பினும், எம்பெருமான் திருவுள்ளப்பாங்கு எவ்வாறிருக்குமோ, முதலெடுத்துப் பாடுகிறது எவ்வாறு, என்று பல ஆலோசனைகளுடன் போய்க்கொண்டிருக்கையில், ஒரு நந்தனவன விஷயமாய்த் தோட்டக்காரரிருவர் சம்பாஷணையில் "பூக்கும் என்கிறேன் பாடு நிரம்ப இருக்கிறது" என்ற வார்த்தைகள் கொச்சையாய்ச் செவிக்கு எட்டியன. அதையே எம்பெருமான் தந்தமுதலெனக்கொண்டு 'பூக்கும் புனல்சூழ்' என்ற கடவுள் வாழ்த்துச் செய்யுளைப் பாடி முறையே உத்ஸவக்கவிகள் முற்றிலும் முற்றுவித்தேன்.

ஓங்கி உலகளந்த உத்தமன் திருத்தாளில் ஒன்றுக்கும் பற்றுத சிறியேன், எனக்கு அவ்வாண்டவன் அளித்த சிற்றறிவுக்கெட்டிய மட்டில் பாடிப் புனைந்தது இஃதாதலாலும், புகழினும் இகழினும் எனக்கோர் பற்றுமில்லை ஆதலானும் இதனைப் படிக்கும் அறிஞர்கள் குறைகளை நிரப்பிக்கொள்ளுமாறு மிகவும் வேண்டுகின்றேன். தங்கள் லௌகிகங்களைச் சிறிதும் பாராட்டாது இதனை நன்கு அச்சிட்டுதவிய செந்தமிழ் ஆசிரியர் ஸ்ரீமத். மு. இராகவையங்கார் அவர்கட்கும்

மயிலாப்பூர் கம்பர்விலாஸம் ஸ்ரீமத். வே. இராஜகோபா லையங்கார் அவர்கட்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்தும் கடப்பாடு உடையேன். அன்றியும் இப்புத் தகத்தைப் பெரிதும் அன்புடன் பாராட்டி அச்சிட்டு வெளிப்படுத்திய அரியக்குடி ஸ்ரீமான் வயி. ராம. கிருஷ் ணன் செட்டியார் அவர்கள் மேன்மேலும் பெருஞ் செல்வமும் தீர்க்காயுளும் மன்னிய புகழும், கண்ணிய குணங்களும் பேரறிவும் நெடுவாழ்வுமுள்ள நன் மக்கட் பேறு முதலிய எல்லாப் பாக்கியங்களும் பெற்று நெடிது வாழும்வண்ணம் எல்லாம்வல்ல நமது பெருமாள் திரு வடித்தாமரைகளை இடையறாது பிரார்த்திக்கின்றேன்.

ரக்தாக்ஷி ஞ
ஆடி மீ 10உ

வயி. நாக. ராம. அ.
இராமநாதன் செட்டியார்,
அமராவதிபுதூர்.



ஸ்ரீ:

ஸ்ரீராமஜயம்

அரியக்குடி

# ஸ்ரீநிவாஸப் பெருமாள் திருவிழா

# வாகனக் கவி

## கடவுள் வாழ்த்து

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

பூக்கும் புனல்சூழ் தருமரியைப்
புரிநம் பெருமாள் கொண்டருளும்
வாக்கு மனக்குக் கெட்டாத
வளத்த திருநாட் கவிபுனையத்
தேக்கும் வெண்ணெய் காட்டுகெனச்
சிறந்த புவனந் தெரிதரவங்
காக்குந் திருவா யொருதெய்வங்
காக்குங் கடமை யுடைத்தாமால். (1)

## முதல் திருநாள்-அன்னவாகனம்.

(பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்)

சீரா ரரியைத் திருநகரந்
தினமுஞ் செழித்துச் சிறந்தோங்கத்
திருவேங் கடமா மலைகடந்து
சேர்ந்த கருணைப் பெருங்கடலே

பாரார் புகழ்வை காசிவிழாப்
பத்தர் குழுமு முகற்றிருநாட்
பால்வெண் ணிறத்த மடவன்னம்
பற்றி யுகைக்குந் தகையென்னே
தாரார் கூந்தற் றிருத்தேவி
தளர்மென் னடையைச் சீர்தூக்கித்
தானே யுணருந் திருவுளமோ
தண்ணங் கமலத் தவிசிலயன்
வாரார் புகழ்ச்சே வடியுறையாய்
மகிழ்ந்து கொடுக்கக் கொண்டருளு
மாண்போ அன்னம் முதன்மையென
வைத்த பொருளோ வழங்குதியால். (2)

## இரண்டாந் திருநாள்-சிங்கவாகனம்.

(எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்)

அங்கமா றுணர்ந்த வேதியர் நிறைந்த
அரியைவாழ் வுடையசெங் கண்ணு
சிங்கவே றேறி யழகிய விரண்டாந்
திருவிழாக் கொண்டமை கண்டேம்
துங்கமார் குலத்தோ ரொருவரை யொருவர்
சூழ்ந்துதாங் குதல்மர பென்றே
சிங்கவா கனமுன் சிங்கமா கியவுன்
திருவடி சுமந்ததை யன்றே. (3)

## மூன்றாந் திருநாள்-அநுமான் வாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

* புவிசுமந்த போராற்றற் குடையுடையா
ரென்றாலும் புலவர் பாடுங்

* புவிசுமந்த போராற்றற்குடை என்பதில், பூமியைத் தாங்கிய ஆதிசேடனாகிய குடை என்பது தொனிப் பொருளாகும்;

கவிசுமந்த வாழ்க்கையரே யென்றுமுளா
 ரென்றுலகங் காணுதற்கோ
அவிசுமந்த அந்தணர்வா ழரியைநக
 ரச்சுதனே * அழியா வாயுட்
கவிசுமந்த சாட்சிகொடுத் தருளினைமூன்
 றாந்திருநாட் காட்சி நன்றே. (4)

நான்காந் திருநாள்-கெருடவாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

அன்னம் பயிலும் பொழிலரியை
 யாளுஞ் சீனி வாசப்பேர்
மன்னும் பெரிய பெருமாளே
 வைகா சியினன் காம்விழவிற்
பொன்னம் பறவை யூர்ந்ததற்குப்
 போந்தாய் கயமுன் கதறியது
கன்னன் கொடையான் யாமொன்று மில்லேங்
 கருணை யென்னேயோ. (5)

ஐந்தாந் திருநாள்-சேஷவாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

காரனந்தந் தவழ்பொழில்சூ ழரியைநகர்த்
 திருக்கோயிற் கமலக் கண்ணா
சீரனந்தங் கொளுமைந்தாந் திருநாளில்
 வெண்பொன்னாற் சிறக்கச் செய்த
ஊரனந்த னாயிரம்பொற் பணம்பரப்பச்
 செழும்பவனி யுவந்து போந்தாய்
பேரனந்தம் பெற்றாலும் *பெரும்பணத்திற்
 கடங்காரார் பேசுங் காலே. (6)

* அழியா ஆயுள் கவி,- சிரஞ்சீவியாகிய அனுமான்.

### ஆறாந் திருநாள்-ஆனைவாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

வானைமேற் கொளுஞ்சிறந்த மாடநிறை
　　யரியைவட மலைநா தாகொம்
பானைமேற் கொளுஞ்செய்கை † யரிதானை
　　மேய்த்தோமென் றகந்தை கொள்ளேல்
ஊனைமேற் கொளும்பஞ்சா யுதமிருந்தா
　　லும்மிதனுக் குதவா தையா
தேனைமேற் கொளுமலரா ‡ ளங்குசங்கைப்
　　பழக்கமின்றேற் றிறலென் னுமால். (7)

மாலை மாற்றுதல்

வேலைமாற் றியவகழி சூழரியை
　　யாளாழி வேந்தே நீண்ட
சேலைமாற் றியதடங்கட் டிருத்தேவி
　　யுந்நீயுஞ் செழுந்தே னூற்று
மாலைமாற் றியதெய்வ மணங்கண்டேங்
　　கயத்தைவிட்டு வந்தாய் மீண்டப்
பாலைமாற் றியமொழியாள் மோகநெடுங்
　　கடல்வீழ்தல் பான்மை யன்றே. (8)

காரை மாற்றிக் கொண்டநிறக்
　　கருணைக் கடலே வேங்கடமாம்
ஊரை மாற்றிக் கொண்டரியை
　　யுறையுந் தேவே தேவியுடன்
தாரை மாற்றிக் கொண்டதனாற்
　　றண்ணந் துளவத் தாமனெனும்

---

* பெரும்பணம் - பெரிய படம், மிகுந்த செல்வம்.

† ஆனை மேய்த்தல்-யானையைச் செலுத்தல், பசுவைமேய்த்தல்.

‡ அங்குசம் - ஆனையையடக்கும் ஆயுதம்: அழகிய தனம்.

பேரை மாற்றித் தாமரைமா
லையனென் றழைக்கப் பெறுவாயே. (9)

பாடிக் கொடுக்கும் பிரபந்தம்
பலவு மேற்றுப் புலவோரைத்
தேடிக் கொடுக்குந் திருவாளர்
சேரு மரியையா யாண்டாள்
சூடிக் கொடுக்கு மணமாலை
தோளிற் கிடக்க மலர்மாது
நாடிக் கொடுக்கு மணமாலை
புனைந்தாய் நன்றுன் ஞாயமே. (10)

தருமாலை யங்காலால் வலம்வருவார்
புவிமிதியா தவராய் வாடா
மருமாலை புனைந்திருப்ப வருள்புரியு
மரியைமணி வண்ண வண்ணத்
திருமாலை தனையாளுந் திருநாளில்
மாற்றினையத் தேவி மேற்கொள்
பெருமாலை யொருகணமு மாற்றிடவல்
லாய்கொல்லோ பேசு வாயே. (11)

(எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

கலைமான்றோல் புனைந்தவெண்ணெண் கலைமான்கள்
தொழுமரியைக் கடவு ளேபொய்ப்
புலைமான்பின் போயதனைப் போழ்ந்தசிலைப்
பெருமானே பொன்னே யாமிவ்
வலைமான்கை பிடித்திடப்போந் தவளிடுங்கண்
ணியில்வீழ்ந்தா யதனு லேழு
மலைமானீ யானுலு மிருமலைமார்
புடையாளே வலியா ளம்மா. (12)

(பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

காருங் கடலுங் காயாவுங் களவின் கனியு மயிற்பீலிக்
கண்ணுங் கழுத்தும் புறங்காட்டக்
கவினு நிறங்காட் டிடுந்தேவே
தேருங் கரியும் பரிமாவுஞ் செறியுந் துவரை தொழுதவருட்
செல்வக் குசேலற் களப்பரிய
திருவைச் செலுத்துஞ் செழுநிதியே
பெருந் தொடையை யிலக்குமி எம்பிராட்டி நீட்டி யதையேற்றுப்
பிறிதோர் தொடையுங் கொடுத்தனையேன்
பின்னு மவளைப் பற்றியெடுத்
தாரும் புகழுந் திருத்தொடையை யளித்தங் கிருத்தி யிலக்குமிநா
ரணனென் றுலகந் தொழலானு
யரியையாயி ததியாமால். (13)

ஏழாந் திருநாள்-புட்பக விமானம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

மாதேவி காதலன்முன் கரும்புருவச்
சிலைகோட்டி மாநாண் பூட்டிப்
போதேவி யழியாத மதனனையார்
செறியரியைப் புரியாய் காதற்
சிதேவி தனைமீட்டுப் புட்பகம்போந்
ததுகதையிற் றெரிந்தே மின்று
பூதேவியுங் கூட்டிப் புட்பகம்போந்
தது கண்டோம் புதுமை தானே. (14)

எட்டாந் திருநாள்-(காலை)வெண்ணெய்த் தாழி,
ஷை இரவு-குதிரை வாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்மம்)

கடந்தபுக ழரியையில்வாழ் திருமடந்தை
மனமுவந்த கணவா வெங்கும்

படர்ந்தபழ மலறக்கிழவா மூன்றுலகோ
　　ரடியளந்த பரந்தா மாமேல்
அடர்ந்தபெருங் கானகத்தை யடைந்தபஞ்ச
　　பாண்டவர்க்கா யன்று தூது
நடந்தபிரானின்றுவெண்ணெய்க் குடங்கவர்ந்து
　　தவழ்ந்ததென்ன ஞாயந் தானே. (15)

விண்ணாடி வந்திறைஞ்சு மரியையில்மா
　　யாவெட்டாம் விழவிற் காலைக்
கண்ணாடி யிற்றிருடும் வெண்ணெயொடு
　　பலவுருவங் காட்டிப் போந்தா
யுண்ணாடி யுளவறிந்த திருடர்செய
　　லிஃதேயா முன்னை யுள்ளக்
கண்ணாடி யிங்ஙகர்ச்சே வகன்பிடித்தெங்
　　களுக்கெல்லாம் காட்டி னானே. (16)

எத்திக்கும் புகழரியை நகரரசே
　　வெண்ணெய்கவர்ந் தின்று காலைப்
புத்திக்கெட் டாநாளென் றேமாற்றிப்
　　பிடிபட்டுப் போனாய் பானாட்
சத்திக்கு மூரடங்க மாவேறி
　　யோடுகின்ற சமையம் வீடு
சித்திக்குஞ் செயற்காவற் கூடத்தார்
　　கையில் மீண்டுஞ் சிக்கி னாயே. (17)

---

உள்ளக்கண் நாடி - மனக்கண்ணால் கண்டு.

சேவகன் ஊர்காவலன்; அரியக்குடித் திருக்கோயில் கண்ட சேவகஞ் செட்டியாரவர்கள்.

எட்டாநாள் - எட்டாந்திருவிழா, எட்டாத நாள். செயற்காவற் கூடத்தார் - (வீடு சித்திக்குஞ்) செயற்கு ஆவலுள்ள கூடஸ்தர், சிறைச்சாலைக்குரியவர்.

## ஒன்பதாந்திருநாள்-திருத்தேர்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

தாரதமி யம்பார்த்தா தரிப்பவர்கட்
கவ்வுதவி தானே சேரும்
பாரதங்கண் டருளியநாட் பாண்டவர்கள்
வேண்டவிறற் பார்த்த னேறு
மோரதம்பூட் டியபரிக ளோட்டியநீ
பிராட்டியரோ டுளம்பூ ரிப்ப
மாரதமோட் டின * ரமரா வதிநாட்டார்
காணரியை வாழு மாலே. (18)

## பத்தாந் திருநாள்-கோரதம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

இருதிரண்டு மூன்றினிலுஞ் சிறந்துயர்வை
காசிவிழா வீரைந் தாநாள்
எருதிரண்டு பூட்டிவரும் † வருணரதத்
தினிற்றேவ ரிறைஞ்சி யேத்திக்
கருதிரண்டு மாதருடன் பார்த்தசா
ரதிக்கோலங் கண்டா யென்னே
பொருதிரண்டு கரையுமலை யெறியுமதா
நதியரியைப் புரியின் மாலே. (19)

---

* அமராவதி நாட்டார் - பன்னிரண்டு ஊர்கள் கொண்ட அமராவதி நாட்டு ஜனங்கள், தேவர்.

† வருணரதம் - அருச்சுனனேறிய தேர் அக்கினி தேவனுற் கொடுக்கப்பட்டதாதலால், இக்கோரதம் வருணரதமென்று நயம்படக் கூறப்பட்டது. [வருணரதம் - வருணனுற் கொடுக்கப்பட்ட தேர், வர்ணங்களுள்ள தேர்] மதுநதி- அரியைக்குப் பக்கத்தோடும் தேனாறு.

## பதினோராந் திருநாள்- வெள்ளி ரதம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

கலைகொண்ட புகழாள ருறைகின்ற
வரியையில்வாழ் கருணை மாலே
விலைகொண்ட வெள்ளிரதத் தன்னைமா
ரிருவருடன் விளங்கிப் போந்தாய்
அலைகொண்ட பாற்கடல்தான் கரைபுரண்டீங்
கெய்தியதோ வன்றேல் மாறா
நிலைகொண்ட வமுதகடம் பொங்கிவழிந்
தோடியதோ நிகழ்த்து வாயே. (20)

## பன்னிரண்டாந் திருநாள்-தெப்பம்.

(எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

பயத்திலே பிறந்து வளர்ந்தபொற் கொடியும்
பஃறலைப் பாந்தளுச் சியின்மேற்
பயத்திலே சூழ்ந்து கிடந்தபூங் கொம்பும்
பங்கயச் செங்கையா லணைப்பப்
பயத்திலே கிடந்து வளர்ந்தநீ யவரைப்
பற்றுபு தெப்பம்வீற் றிருந்தாய்
பயத்திலே கிடக்கு மச்சமா முனக்கும்
பயமுண்டோ வரியைவாழ் பவனே. (21)

தண்ணிய பொழில்சூ ழரியைவாழ் முகுந்த
சாமிநீ திருவுள முகக்குந்
திண்ணிய தெப்ப மியங்கநீ ரின்றிச்
சிந்தைநொந் தயர்ந்திடும் போழ்திற்

---

முதலிலும் மூன்றிலும் வரும் பயம் - பால்; இரண்டிலும் நான்கிலும் வரும் பயம் - நீர். பயத்திலே - (நீரில்) கிடக்கும் மச்சத்துக்கு (மீனுக்கு) பயமுண்டோ என்க.

புண்ணிய முகில்கள் கணத்தினிற் குமுறிப்
பொழிந்துநீர் நிறைந்தது சுற்றப்
பண்ணிய பெருமை முன்மழை தடுத்த
பரிசினைப் பாற்றிய தன்றே. (22)

பதின்மூன்றாந் திருநாள்-விடாயாற்றி.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

வானைபாய் தடம்புடைசூ ழரியையவா
ழெங்கள்குல வாழ்வே செம்பொற்
றானைவா னுறநீட்டி யளந்ததிருத்
தாடாளா தசக்கி ரீவா
நானைவா வின்றுபோ வென்றுய்க்கும்
விடாயாற்றல் ஞாயந் தானோ
* நீளையா தியரைத்தான் விடாயாற்றி
யென்றுன்னை நிகழ்த்து வாரே. (23)

பதினான்காந் திருநாள்-அலர்மேல் மங்காபுரம் சேறல்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

அலர்மேன் மங்கை யகலாத
வரியை நகரி லமர்ந்தோனே
அலர்மேன் மங்கை மணவாளா
வழகார் வடவேங் கடநாதா
அலர்மேன் மங்கை திருமார்பி
லணியா விருந்தும் நெடுந்தூரத்
தலர்மேன் மங்கை புரஞ்சென்றாய்
காதற் கடற்கோ ரளவுண்டோ. (24)

---

* நீளையாதியர் - நீளாதேவி, சீதேவி, பூதேவியர்.

## பதினைந்தாந் திருநாள்-புன்னைக்கிளை ஸேவை.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

விருத்திசெயுந் தனவணிக ருறையரியைக்
கோபால விமலா முன்ன
மொருத்திபுனைந் திடுமாடை யொன்றுபல
வாகிவளர்ந் துயரச் செய்தாய்
திருத்தியபூங் குழன்மடவார் பலர்களைந்த
துகிலொருங்கே திருடிச் சென்றாய்
கருத்தெதுவோ பொதுவர்குலத்
தினில் வளர்ந்தாய் நடுநிலைமை கண்டோ மின்றே.

உரமேறிப் பயிரெல்லாம் விண்ணேறி
வளரரியை யுடையாய் புன்னை
மரமேறிக் கலைசுருட்டி யொளித்தாய்நீ
யெனத்தேடி வந்தோந் தேவர்
புரமேறி மீண்டாற்குக் கலைவிரித்துக்
காட்டிவெளிப் போந்தா யென்று
வரமேறி யொளிர்சாமி வீட்டுவா யிலிற்கண்டோம்
மகிழ்கொண் டோமே. (26)

### வாழ்த்து.

திருமலைபோற் பற்பலகோ புரமிங்கு
ளுள்ளவெனுந் திருவுள் ளத்தாற்
றிருமலைமே லிருந்தரியை வந்தபெரு
மாள்திருநாள் தினமுங் காண்பான்
திருமலையே யெனவருவார் நனவினும்பே
சுங்கொலெனுந் திருக்கோ லஞ்செய்
திருமலையர்ச் சகருமவர் வழியோரும்
நெடுவாழ்வு சிறக்க மன்னோ. (27)

ஓரிழுக்குமி லாதசத்திய
வேதியர்க்கு விழாவினில்
ஓதுதற்கரி தானபோசன
முதவுகிற்பவர் வாழியே
தேரிழுக்குந லூரவர்க்கமு
தேயெனத்தகு போனகஞ்
சீர்பெறப்பரி மாறியிட்ட
சிதம்பரன்குலம் வாழியே
நீரிழுக்கு மறக்கரவை
யெறிந்தவேங்கட நாயகன்
நேயமிக்குற வாகனம் பணி
நேருமுத்தமர் வாழியே
தாரிழுக்கும் விரைக்குழற்புவி
மாதுமாதமு மாரியாற்
ருழ்வுசற்று மிலாவளத்தொடு
சாரநித்தலும் வாழியே. (28)

அத்திக்கு முன்வந்த வரியைநா
யகன்றிருநா ளனைத்தும் நோக்கிச்
சுத்திக்கு முள்ளமவன் றிருவருள்பூத்
துக்கனிந்து துதித்த விந்தத்
தித்திக்குங் கவிபடிப்போ ரிவ்வுலக
வின்பமெல்லாஞ் சிறக்கத் துய்த்து
முத்திக்கும் வழிகாண்பர் நாற்றிக்கு
மவர்புகழை மொழியுந் தானே. (29)

வாழ்க அரியைமலர் மடந்தை பூமாது
வாழ்கவெல்லாம் வல்ல இறைவன். (30)

சுபம்! சுபம்!! சுபம்!!!

முற்றிற்று.

